

# துன்பம் நேர்கையில்..

சீதா..!
யாரோ வாசலில் கூப்பிடும் சத்தம் கேட்டது.

அவள் கனவிலிருந்து வெளிவந்து கண் விழித்துப் பார்த்தாள். தட்டிக்குள்ளால் நுழைந்த வெளிச்சம் கண்ணுக்குள் பட்டுத் தெறித்ததிலிருந்து விடிந்து போயிருப்பது தெரிந்தது.

'யாராய் இருக்கும்..?' நெஞ்சில் ஒருவித பய உணர்வு சட்டென்று தேங்கி நின்றது.
மீண்டும் அதே குரல் கேட்டது. கவனமாகக் காது கொடுத்துக் கேட்டாள். பெண் குரல். பக்கத்து வீட்டு ரேவதி மாமியின் குரலாகத்தான் இருக்கும் என்ற நினைப்போடு அவசரமாக எழுந்து சோம்பல் முறித்து கூந்தலை அள்ளி முடிந்து கொண்டாள்.
இப்போதெல்லாம் முன்புபோலப் பயப்பட வேண்டியதில்லை. நாட்டில் நடப்பதைப் பார்த்தால், ஆட்சி மாறினாலும் அதிகாரம் மாறாமலே இருப்பது போன்ற ஒருவித பிரேமை தோன்றலாம். ஆனாலும் என்ன நடக்கும் என்று சொல்ல முடியாது. முன்பெல்லாம் யாராவது அழைத்தாலே பயம் பிடித்துக் கொள்ளும். வாசல்வரை வந்து அழைத்துச் சென்றால், அப்புறம் பிணமாகத்தான் வீடு வரவேண்டும். இல்லாவிட்டால் தொலைந்து போனவர்களின் பட்டியலில் இடம் பெறவேண்டும். எதுவாக இருந்தாலும் முடிவு என்னவென்பதை வந்தவர்களே தீர்மானிப்பார்கள். எஞ்சியிருக்கும் நீங்கள்தான் அந்த இழப்பின் வலியைக் காலமெல்லாம் சுமக்க வேண்டிவரும்.
இவளது கணவனையும் ஒரு நாள் அதிகாலையில் இப்படித்தான் வெளியே வரும்படி அழைத்துக், கூட்டிச் சென்றார்கள். அப்புறம் கணவனுக்கு என்ன நடந்தது, இருக்கிறானா இல்லையா என்றுகூட இதுவரை தெரியவில்லை. கைக்குழந்தையோடு தனித்துப் போன அவளது வாழ்க்கை இதுவரை அர்த்தமற்றதாய் போயிருந்தது. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் அவள் பட்ட அவஸ்தை சொல்லி மாளாது. குழந்தைக்காகவாவது வாழவேண்டும் என்று அவள் உறவுகளால் நிர்பந்திக்கப் பட்டாள். வருமானத்திற்கு எங்கே போவது, அதுவே பெரிய தொரு கேள்விக்குறியாய், பூதாகரமாக கண்முன்னால் பயம் காட்டியது.
யுத்த சூழலில் யாரும் வலிய வந்து உதவுவதற்கு முன்வரவில்லை. தெரியாத வேலை என்றாலும், இன்னும் ஒரு உயிர் வாழவேண்டுமே என்ற ஆதங்கத்தோடு அடுத்த நேரக் கஞ்சிக்காகக் கூலி வேலைக்கும் சென்றாள். ஆனாலும் என்னதான் மறக்க நினைத்தாலும், அவளது கணவனை அன்று அழைத்துச் சென்ற அந்த வெள்ளைவான் மட்டும், யமதர்மனின் எருமைமாடுபோல, அவள் கண்ணுக்குள் அடிக்கடி நிழலாடிக் கொண்டே இருந்தது.
காலம் எப்படி எல்லாம் மனித மனங்களை மாற்றிவிடுகின்றது. நல்லவன் கூடாதவனாகவும், கூடாதவன் நல்லவனாகவும் பட்டியலில் இடம் பெற்றுவிடுவது காலத்தின் கோலம்தான். காலம் யாருக்காகவும் காத்திருக்காது என்பது போல, எப்படியோ இழுத்துப் பறித்து நடந்த தேர்தலால் அரசியல் பட்டியலும் இப்போது மாறிவிட்டது. நடுத்தர குடும்பத்தில் பிறந்து வளர்ந்த அவளால் இழப்பை முற்றாக மறக்க முடியாவிட்டாலும், இப்போதெல்லாம் கொஞ்சம் நிம்மதிப் பெருமூச்சாவது விடமுடிகின்றது.
ஆழ்ந்த சிந்தனையோடு வெளியே வந்து பார்த்தாள். மாமியுடன் இன்னும் இருவர் வாசலில் நின்று கொண்டிருந்தனர்.

 

'என்ன மாமி, காலங்காத்தால.. என்ன விஷயம்..?' குரலில் அவளையறியாமலே ஒருவித பதட்டம் கலந்து வந்தது.

'விஷயம் இருக்கு, அதுதானே வந்தனாங்கள்' என்றாள் மாமி.
ஒன்றும் புரியாமல் பார்த்தாள், மாமியின் வார்த்தைகளில் பதட்டம் இருக்கவில்லை. அருகே இரண்டு பேர் நன்றாக உடுத்தபடி, புன்னகையோடு நின்றிருந்தார்கள். வெளிநாட்டவர்போல தெரிந்தார்கள்.

'சீதா, இவங்க கனடாவில் இருந்து வந்திருக்கிறாங்கள்' என்று மாமி அறிமுகப்படுத்தினாள்.

கையுயர்த்திக் கும்பிட்டு, சைகையாலே வணக்கம் சொன்னாள். அவர்களும் அப்படியே செய்தார்கள்.
'அக்கா, நாங்க அன்பு நெறியில இருந்து வந்திருக்கிறோம்.'
'அன்பு நெறியா, கனடாவில இருக்கிற அன்பு நெறியா?' அவளது விழிகள் விரிந்து ஒரு கணம் நிலைத்து நின்றன.
'ஓம், அங்கையிருந்துதான் வாறம், உங்களுக்கு அன்பு நெறி பற்றித் தெரியுமாக்கா?'
'ஓம் ஓம் என்ன நீங்கள், தெரியுமா எண்டு கேட்டிட்டீங்க, ஒண்டுமே தெரியாமல் இருந்த எனக்கு தங்கட செலவில தையல் வகுப்பு நடத்தி எனக்கு பாடம் சொல்லித் தந்தது அவைதானே..!'
'ஓ அப்படியா, மறந்து போயிடுவீங்களோ எண்டு பார்த்தேன், நல்ல விஷயத்தை ஞபகம் வைச்சிருக்கிறீங்கள்.'
'அவை செய்த உதவியை எப்பிடி மறக்கமுடியும். இப்ப கூழோ கஞ்சியோ குடிக்க அவை சொல்லித் தந்த இந்த தையற்கலைதானே எனக்கு உதவியாய் இருக்கு' என்றாள்.
என்னக்கா சொல்லுறீங்க, தையல் செய்ய உங்களுக்கு விருப்பமாக்கா?

'தினக்கூலிக்கு தைக்கப் போறனான். உண்மையாகவே இதுதான் சாப்பாட்டிற்கு எனக்கு மட்டுமில்லை, இங்கை இருக்கிற என்னைப் போன்றவைக்கும் வருமானம் தருகுது, எவ்வளவு நாளைக்கோ தெரியாது. அதுசரி உங்களை வெளியாலை வைச்சுக் கதைச்சுக் கொண்டிருக்கிறன், உள்ள வங்கோ.' சீதா உள்ளே அழைத்துச் சென்று உட்கார வைத்தாள்.

'அப்ப உங்களுக்கு வேற வேலையே தெரியாதாக்கா?'
'இந்தக் கிராமத்திலா, வேறை என்ன கூலி வேலைக்குத்தான் போகலாம்'

'இல்லை அக்கா, இதுக்காகத்தான் இந்த தையல் பயிற்சியை முதல்ல கிழக்கு மாகாணத்தில பாதிக்கப்பட்டவைக்குத் தந்தனாங்கள். அது உங்களுக்குப் பயன்பட்டிருக்கு என்று தெரியுது. ஆதனால நாங்கள் உங்களுக்கு ஒரு நல்ல சேதி கொண்டுவந்திருக்கிறம்.'

'எனக்கா நல்லசேதி, அப்பிடி என்றால் என்ர புருசன் உயிரோட இருக்கிறாரா?' அவள் முகத்தில் எதையோ எதிர்பார்த்த, பொங்கி வந்த ஆர்வத்தோடு அவர்களைப் பார்த்தாள்
'இல்லை அக்கா அதுபற்றி எங்களுக்கு உண்மையாகவே தெரியாது, ஆனால் உங்கள் எதிர்காலம் வளமாய் இருக்க வேணும். ஆதனால நாங்கள் ஒரு திட்டத்தோட வந்திருக்கிறம்'

'என்ன ராசா, என்ன திட்டம், சொல்லுங்கோ'
'நாங்கள் உங்களுக்கு தவணை முறையில் பணம் கட்டக்கூடியதாகத் தையல் மெசின் ஒன்று வாங்கித் தரப்போறம்'

'தையல்மெசினா.. எனக்கா..?' அவள் நம்ப முடியாமல் ஆச்சரியமாய் அவர்களைப் பார்த்தாள்.

'அதாவது நாங்கள் உங்களுக்கு மட்டுமல்ல, எங்கட திட்டத்திலை தையல் படித்தவர்களுக்கு கடனாக ஒரு தையல் மெசின் தரப்போகிறம். நீங்களே அதை வைச்சுப் பிழைக்கலாம். மாதாமாதம் வருகிற வருமானத்தில தவணைப் பணத்தை கட்டி முடிச்சால் போதும்.'

'உண்மையாவா?'

'ஓம், இந்தத் திட்டத்தின்படி, நீங்கள் கடனைக் கட்டி முடிச்சதும் அந்தப் பணத்தை எடுத்து தேவையான இன்னுமொருவருக்கு உதவி செய்ய நினைச்சிருக்கிறம்.'

இப்படியும் மனிதர்களா, அதுவும் வெளிநாட்டில் இருந்து வந்து எங்களுக்கு உதவி செய்கிறார்களா? உணர்ச்சி வசப்பட்டதில் அவளது கண்கள் கலங்கின.

'நீங்கள் எல்லாம் இந்த மண்ணைவிட்டுப் போனபோது நாங்க உங்களைப்பற்றித் தப்பாய் பேசினோம். ஆனால் இப்போதுதான் புரியுது, நல்ல மனசு படைத்த வெளிநாட்டில் இருக்கும் உங்களைப் போன்றவர்களால்தான் நாங்கள் இந்த மண்ணில் மானத்தோடு நிம்மதியாய் வாழமுடியுது.' வார்த்தைகள் விம்மலோடு வெளிவந்தன.

'இல்லை அக்கா, எங்கட உடன் பிறப்புகளுக்கு எங்களால முடிஞ்ச அளவு உதவியைச் செய்யிறம், அவ்வளவுதான்.'

'உதவி என்று செய்யிறத்திற்கும் நல்ல மனசு வேணுமெல்லே, நீங்கள் எவ்வளவோ தூரத்தில இருக்கிற கனடாவில இருந்தாலும் உங்கட சிந்தனை எல்லாம் எங்களோடதான் இருக்குது எண்டு இப்பதான் எங்களுக்கும் புரியுது.'

'இது எங்கட இனத்திற்குச் செய்ய வேண்டிய எங்கட கடமையக்கா. தனித்தனியாய் செய்யாமல் ஒன்றாய் சேர்ந்து 'அன்பு நெறி' என்ற பெயரிலை செய்யிறம். நாங்க மட்டுமல்ல, எங்கட அடுத்த தலைமுறையும் கட்டாயம் தொடர்ந்து இதைச் செய்யும்.'

'ஒரு நிமிசம் இருந்து தேத்தண்ணி குடிச்சிட்டுப் போங்கோ' என்று சொன்ன சீதா சமயல்கட்டு நோக்கி நடந்தாள்.

அவர்களின் பார்வை சுவரில் மாட்டியிருந்த அந்தப் படத்தில் பதிந்தது. ஒரு அழகான பட்டுத் துணியில் சீதாவின் தையற்கலைக்கு அடையாளமாகவோ, அல்லது நன்றியுணர்வின் வெளிப்பாடகவோ வண்ண நூல்களின் தையல் வேலைப்பாட்டோடு கூடிய வாசகம் அடங்கிய பிறேம் கண்ணில் பட்டது.

'இடுக்கண் களையுமாம் அன்பு நெறி'

இவர்களின் கண்கள் கலங்கிப் போனது. சீதா சுடச்சுட கொண்டு வந்து கொடுத்தது வெறும் தேத்தண்ணி எண்டாலும், பாதிக்கப்பட்ட அவர்களுக்கு எங்களால் முடிந்த உதவியைச் செய்கிறோம் என்ற திருப்தியில் இவர்களின் மனசெல்லாம் இனிப்பாய் நிறைந்து போனது.



குரு அரவிந்தன்





# அன்புநெறி இலங்கை

அன்புநெறி கனடாவின் வேலைப்பாடுகளையும் திட்டங்களையும் இலங்கையில் நடைமுறைப்படுத்துவகற்கும், புதிய வேலைப்பாடுகள், வேண்டுகோள்களை கண்டறியவும் இலங்கையில் நமக்கு ஒரு பிரதிநிதித்துவம் இன்றியமையாததாய் இருக்கின்றது.

இந்த நோக்கங்களிற்காக அன்புநெறி இலங்கைக் கிளை அமைக்கப்பட்டு அது ஒரு அரசசார்பற்ற நிறுவனமாக பதியப்பட்டுள்ளது.

அன்புநெறி மனிதநேய அபிவிருத்தி நம்பிக்கை நிதியம் **(Anpuneri Humanitarian Development Trust Fund)** என்ற பெயருடன் இவ்வமைப்பு பெப்ரவரி 09, 2015 இருந்து உத்தியோக பூர்வமாக தன் பணிகளை ஆரம்பித்துள்ளது.

இவர்களால் மேற்கொள்ளப்படும் அனைத்து வேலைப்பாடுகளும், திட்டங்களும் அன்புநெறி கனடாவின் அங்கீகாரத்துடனேயே மேற்கொள்ளப்படவேண்டும். இத்திட்டங்கள், வேலைப்பாடுகளிற்கான நிதி அன்புநெறி கனடாவின் ஊடாகவே வழங்கப்படும்.

102 உதயநகர் மேற்கு, கிளிநொச்சி எமது இலங்கை கிளையின் முகவரியாகப் பதிவு செய்யப்பட்டுள்துடன்,

திரு அப்பாத்துரை பஞ்சலிங்கம்,
திரு மகாதேவா மதிவதனன்
செல்வி செல்லையா சாந்திமலா
திரு ஆறுமுகம் சத்தியமூர்த்த
மருத்துவ கலாநிதி தயாசிவம் கோபிசங்கர்
திரு அருமைத்துரை சுபாகரன் ஆகியோர் ஆயுட்கால உறுப்பினர்களாகவும்

திரு சின்னத்துரை சிவகுமாரன் பொகுக்குழு அங்கத்தவராகவும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இலங்கை கிளையின் யாப்பும் தயாரிக்கப்பட்டு செயற்குழு உறுப்பினர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.



சின்னத்துரை சிவகுமாரன்
சின்னத்தம்பனை
செட்டிகுளம்.
15-11-2015

## எனது செயற்பாடு பற்றிய சிறு விளக்கம்

அன்பு நெறி தலைவர் - கனடா அவர்கட்கு,

ஐயா மேற்படி முகவரியுடைய நான் கடந்த 2013ம் ஆண்டு தொடக்கம் செட்டிக்குளம் பிரதேசத்தின் அன்பு நெறி மேற்பார்வை செய்யும் முன்பள்ளிகளிற்கும் மாலை நேர வகுப்பிற்குமான மேற்பார்வையாளராக பணியாற்றிவருகிறேன். நான் எனது கல்வியினை 1995 ஆன்டு யுத்த நிலை காரணமாக எனது படிப்பினை தரம் 11 வரை படித்து பின் அன்று தொடக்கம் இன்று வரையும் கமம், விவசாயம், கூலித்தொழிலையே செய்து வாழ்ந்து வருகிறேன். எனக்கு மூன்று குழந்தைகள் உள்ளார்கள். கடந்த வருடம் எமக்கு வீட்டுத்திட்டம் கிடைக்கப்பட்டது. நாம் முன்பு ஓர் சிறு கொட்டகை வீட்டிலேயே வாழ்ந்து வந்தோம். பின் நாம் புதிதாக கட்டிய வீட்டிற்கு குடி போனபோது இவ் வீட்டிற்கான மின் இணைப்பு இல்லாத காரணத்தினால் எமது வீட்டிற்கான மின்சாரம் துண்டிக்கப்பட்டது. எனது பிள்ளைகள் படிப்பதற்கு பெரும் கஸ்டப்பட்டபோது எமது அன்புநெறி தலைவர். திரு. கௌரிபாலன் அண்ணாவிடம் எமது கஸ்ரநிலையினை கூறியபோது அவர் உடன் முன்வந்து எமக்கு 25000/= ரூபாய் அனுப்பிவைத்து எமது வீட்டிற்கு ஒளி ஏற்றி வைத்தார். இவ் உதவியினை நாம் அன்புநெறியினையும் அன்பு நெறி தலைவருக்கும் கடமையுள்ளவர்களாக உள்ளோம். ஐயா நான் கேட்பது ஒன்றுதான் எனது கிராமத்தில் எமது பாடசாலைகளில் நடைபெறும் நிகழ்வுகளின் நிழல் படங்களை தங்கள் கண்களிற்கு பார்ப்பதற்கு email அனுப்புவதற்கோ படம் பிடிப்பதற்கோ என்னிடம் எதுவும் இல்லை திரு. குகன் ஐயா முன் ஓர் கமரா தந்துள்ளர் அது கடந்த 01 வருடகாலமாக செயலிழந்த நிலையில் உள்ளது. நான் எனது நண்பர்களின் Phone ல் படம் எடுத்துதான் கொமினிக்கேசன் சென்று அனுப்புகிறேன். எனவே தங்களால் முடிந்தால் இவ் உதவியினையும் செய்யும் பட்சத்தில் இங்கு காணப்படும் செயற்பாடுகள் தாமதமின்றி உங்கள் பார்வைக்கு கிடைக்கும் என்று கூறி எனது சிறு உரையினை நிறைவு செய்கிறேன்.

நன்றி
இங்கனம்
சின்னத்துரை சிவகுமாரன்

ANPUNERI.ORG



# மாலை நேர வகுப்பு- அரசடிக்குளம்.

மேற்படி மாலை நேர வகுப்பானது 2013ம் ஆண்டு அன்பு நெறி ஐயா அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இம் மாலை நேர வகுப்பிற்கு முன்பள்ளி மாணவர்கள் தொடக்கம் 08ம் வகுப்பு வரை வருகை தருகின்றனர். மாலை நேர வகுப்பு மாணவர்களின் மொத்த எண்ணிக்கை 41 மாணவர்களாக உள்ளது. இம் மாலை நேர வகுப்பிற்கு வருகை தரும் மாணவர்கள் மிகவும் வறுமைக்குட்பட்ட மாணவர்களாக உள்ளனர். இவ் எண்ணத்தை கருத்திற்கொண்டுதான் அன்பு நெறி ஐயாவால் இம்மாலை நேரவகுப்பு ஆரம்பித்து வைக்கப்பட்டது. பிள்ளைகளின் கல்வி தேர்ச்சியானது முன் நிலையை விட தற்போது சிறப்பாக உள்ளது. மாணவர்களுக்கான கணிப்பீடுகள் வைத்தோம் மாணவர்கள் சிறந்த புள்ளிகளை பெற்றுள்ளனர். மாலை நேர வகுப்பானது சிறந்த முறையில் நடந்து வருகின்றது. மாலை நேர வகுப்பை நல்லமுறையில் நடாத்தும் அன்பு நெறிக்கு நன்றி கூறுகின்றோம்.

## வகுப்பிற்கான தேவைகள்

மாணவர்களுக்கான கற்றல் உபகரணங்கள், விளையாட்டு உபகரணங்கள் ஆசிரியர்களுக்கான கற்பித்தலுக்கான பயிற்சி புத்தகங்கள் தேவையாக உள்ளது. இவற்றையும் தந்துதவுமாறு அன்பு நெறி அமைப்பிடம் மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கின்றோம்.

மாலைநேர வகுப்பு ஆசிரியர்கள்
S. லூர்த்துமேரி
க. சுதர்ஷா
17.11.2015



# தமிழமுதம் முன்பள்ளி - சின்னத்தம்பனை

வவுனியா மாவட்டத்தில் செட்டிக்குளப் பிரதேசத்தில் எழில் கொஞ்சும் கிராமமாம் சின்னத்தம்பனை என்னும் ஊரில் 2001ம் ஆண்டு 5 மாணவர்களுடன் சிறு கொட்டிலில் செல்வி சிற்றம்பலம் செல்வநிதி ஆசிரியருடன் அக்கிராம மக்களின் பங்களிப்புடன் எமது முன்பள்ளி ஆரம்பமானது. பின் 2002 ம் ஆண்டு போலூட் நிறுவனத்தினால் கட்டிடம் அமைக்கப்பட்டடு தமிழமுதம் முன்பள்ளி என்ற பெயருடன் இயங்கிக்கொண்டிருந்தவேளை 2003ம் ஆண்டு பங்குனி மாதம் சி.செல்வநிதி ஆசிரியர் விலகிச்செல்ல திருமதி. சுமதி சிவகுமார் ஆசிரியராக பெறுப்பேற்றார். எமது முன்பள்ளி மாணவர்கள் சிறப்பாக கல்வி கற்று வந்தார்கள். அவர்கள் தரம் 05 புலமைப்பரிசில் பரீட்சையில் 100 தொடக்கம் 150 வரையிலான புள்ளிகளை பெற்றார்கள் கல்வி நிலை இவ்வாறு சென்றுகொண்டிருந்த வேளை 2006ம் ஆண்டு நாட்டின் போர் சூழ்நிலை காரணமாக எமது முன்பள்ளி தொடர்ந்து இயங்க முடியாத நிலை ஏற்பட்டது. கட்டடங்களும் சேதமடைந்தது. இதன் காரணமாக சின்னத்தம்பனை, அ.த.க பாடசாலையின் ஓர் பகுதியில் இயங்கிவந்தது. இவ்வாறு பல இடர்களை சந்தித்துக்கொண்டிருந்த வேளை 2012ம் ஆண்டு மார்கழி மாதம் எமது கிராமத்தில் அன்புநெறி என்னும் நாமத்துடன் கால் பதித்த அன்புநெறி எமது மாணவர்களின் நிலைகண்டு சிதைவடைந்த முன்பள்ளிக் கட்டடத்தை புனரமைப்பு செய்து தந்தது. 2013ம் ஆண்டு நாம் மீண்டும் எமது முன்பள்ளிக் கட்டடத்தில் மகிழ்ச்சியுடன் கால் பதித்தோம். இத்தோடு நின்றுவிடாத அன்புநெறி தொடர்ந்து எமது முன்பள்ளிக்கு விளையாட்டு முற்றம், பாடசாலை சீருடை, கணனி, சுற்றுவேலி, மின்னிணைப்பு, ஆசிரியர் கொடுப்பனவு என பல சேவைகளை செய்துகொண்டிருக்கின்றது. இதன் காரணமாக எமது முன்பள்ளி புதுப்பொலிவு கண்டுள்ளது. அத்தோடு 2015ம் ஆண்டு நடைபெற்ற முன்பள்ளிகளுக்கான விளையாட்டுப்போட்டியில் முதலாம் இடத்தினை பெற்றுக் கொண்டதோடு பிரதேச மட்ட விளையாட்டுப்போட்டியில் எமது 05 வயது மாணவர்கள் முதலாம், இரண்டாம் இடங்களைப்பொற்றுக்கொண்டார்கள். அத்தோடு இவ்வருடம் தரம் 05 பரீட்சையில் எமது முன்பள்ளி மாணவன் செல்வன். சண்முகம் சங்கவன் 155 புள்ளிகளை பெற்று சித்தியடைந்துள்ளார். என்பதை மகிழ்வுடன் அறியத்தருவதோடு எமது முன்பள்ளிக்கு உறுதுணையாக இருக்கும் அன்புநெறிக்கும் எம்மோடு நின்று அயராது பாடுபட்ட திரு. குகனேந்திரன் ஐயாவிற்கும் மற்றும் இதை செயற்படுத்திக் கொண்டிருக்கும் அனைவருக்கும் எமது முன்பள்ளியின் சார்பில் மனமார்ந்த நன்றிகளை தெரிவிப்பதோடு இனிவரும் காலங்களில் எமக்கு தேவையான உதவிகளையும் பெற்றுத்தருமாறு மிகவும் பணிவுடன் வேண்டிநிற்கின்றேன்.

நன்றி

இங்கனம்

திருமதி. சுமதி சிவகுமாரன்

## தேவைகள்

1. உள்ளக கற்றல் கற்பித்தல் உபகரணங்கள்
2. அலுமாரி
3. ஆசிரியர் கதிரை
4. குடிநீர் வசதி
5. போசாக்கு உணவு
6. சமையல் உபகரணங்கள்



## சின்னத்தம்பனை முன்பள்ளி - மாலை நேர வகுப்பு அறிக்கை

சின்னத்தம்பனை என்னும் கிராமத்தில் அமைந்துள்ள முன்பள்ளி என்ற சிறுவர் பாடசாலையில் நடைபெற்று வரும் மாலை நேர வகுப்பானது மிகவும் சிறப்பாகவும், ஒழுங்காகவும் மிகவும் திறன்பட நடைபெற்று வருகின்றது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் அறியத் தருகின்றேன்.
மேலும் மாலை நேர வகுப்பிற்கு வருகை தரும் மாணவர்களின் கற்றல், கற்பித்தல் செயற்பாடுகளிலும் பல முன்னேற்றங்களைக் கண்டுள்ளோம். அந்த வகையில் மாணவர்களுக்கான மாதாந்த பரீட்சை, மற்றும் தவணை பரீட்சைகளும் நடைபெற்றுள்ளதுடன் மாணவர்களின் பரீட்சைப் புள்ளிகளும் மிகவும் சிறப்பான முறையில் அதிகூடிய புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

மேலும் மாணவர்களுக்கான கல்வி கற்பித்தல் செயற்பாடுகளுக்கான பயிற்சிப் புத்தகங்களையும், மாணவர்களுக்கு பயிற்சிகளை விளக்கப்படுத்த ஓர் கரும்பலகை ஒன்றையும், மாணவர்கள் விளையாடுவதற்கு பந்துகள் சிறிது - 1, பெரிய பந்து - 1 ம் கேட்டுக் கொள்கின்றோம். இவற்றினை தந்துதவுமாறு மாலை நேர வகுப்பாசிரியை என்ற வகையில் கேட்டுக் கொள்கின்றேன்.

நன்றி

மாலை நேர வகுப்பாசிரியை
கோ. பரமேஸ்வரி

## என்றும் வாழ்கவே

கவிதைகள் ஓராயிரம்
கவலைகள் நெஞ்சோரம்
உறவுகள் பல்லாயிரம்
எம் உறவு மட்டும் ஓராயிரம்
உம் பணியை வாழ்த்தியே
எழுதுகின்றேன்.
கவிதைகள் ஓராயிரம்!

ஏழைகள் வாழ்வை மேம்படுத்த
அன்பு நெறி என்ற நாமத்துடன்
பணிதனை செய்து வரும்
உம் சேவையை
நாவினால் புகழ்ந்து பசுமையாய் எழுதி
இதயத்தால் வாழ்த்துகின்றேன்!

மாணாக்கர் கல்வி சிறப்புற
நல் ஆசானாய், உற்ற நண்பனாய்
தேவைகள் தோறும் சேவைகள் செய்து
தூய அன்பு பணி செய்தீரே!
என்றென்றும் வாழ்க உம் பணி
வளர்க உம் சேவை நோக்கு!

வாழ்வியல் பாதைகள் சீர் பெறவே
திட்டங்கள், கல்விப் பணியெனப் பல பணி
செய்து,
ஆக்கமும், ஊக்கமும் அளித்து
ஓர் எதிர்காலத்திற்கு அத்திவாரமிட்ட
அன்பு நெறி என்ற அரும் பணியே!
உம் பணி நினைந்து நன்றி
பொங்கவே வாழ்த்துகின்றேன்
வாழ்க உம் பணி!
வளர்க உம் சேவை!

கோ. பரமேஸ்வரி
மாலைநேர வகுப்பாசிரியை
சின்னத்தம்பனை முன்பள்ளி

## அன்பு நெறி வாழ்கவே

ஒளி விளக்காய் உருவெடுத்து
உன்னதமாய் பணியாற்றும்
அன்பு நெறி வாழ்கவே

சிறுவர்களின் அகல் விளக்காய்
சிறப்புடனே பணியாற்றும்
பண்பு நெறி வாழ்கவே

திறமைகளுக்கு களம் அமைப்பாய்
தினமும் புது கவி படைப்பாய்
ஏழைகளுக்கும் எளியவர்க்கும்
இங்கிதமாய் பணி முடிப்பாய்
என்றென்றும் வாழ்கவே

மானிடரின் மனமறிந்து
மகத்தான செயலாற்றி
ஈகை குணம் கொண்ட
உந்தன் இப்பணி வாழ்கவே
என்றென்றும் வளர்கவே

மாலை நேர வகுப்பு
காந்தி முன்பள்ளி
செட்டிக்குளம்



## பனி விழுங்கும் இரவுகள்

குளிரென் நெஞ்சை அமுக்கவெடியாய் அழுத்தியபோது
இலையுதிர்காலத்தின் கடைசிச்சாட்சியென
பறந்துசெல்லும் அவனைக் கண்டேன்
விபத்தில் இல்லாமற்போனவன் தீப்பிடிக்கும் காயங்களுடன்
துடிப்படங்காது அலையும் தன்செவ்விதயத்தை
உறைந்தபனிக்குள் பத்திரப்படுத்த
மாயன்காலத்தவர்கள் போரினை நிறுத்த
உயிருள்ளவர்களைப் பலியிட்டார்களெனும் குறிப்புகள்
குருதி நரம்புகளெங்கினும் ஓடுகின்றன

காளான்களாய் குண்டுகள் முளைக்கும்
தேசத்தின் செம்மண் தெருக்களிலொன்றில் பதியஞ்செய்கையில்
தொலைந்து போனவர்களின் நினைப்பொழுந்து
போர்துரத்தும் பயங்களைக் கலைக்கலாமென
தீயையொரு நாயைப்போல வருடியபடி கூறுகிறான்
தோழன்.

குருதி நிறத்திலிருந்து நிலம்பார்க்கும் இதயத்தைக்காவியபடி
இரண்டு கடல்களும் மூன்று கண்டங்களும் தாண்டி
சிறுதீவொன்றில் புதைக்கும்போது
பூமிபிளந்து இருதேசங்கள் பிரிந்தன

இப்போது
மழைக்கால ஈசல்களைப்போல
பல்லாயிரம் இதயங்கள்
மாயன்காலத்து போர்க்குறிப்புக்கள் கலைத்து
மீண்டும் மனிதவுருக்கொள்கின்றன
தமிழும் சிங்களமும் பேசி

இரவுகளை கோரமாய் விழுங்கும்
பனியரசனின் தீயுமிழும் ட்ராகனை
கோடையில் சூரியன் விழுங்கியதுபோல்
நஞ்சூட்டப்பட்ட என்னுடலும் வார்த்தைகளும்
பொறி வைத்துக்காத்திருக்கின்றன
போர் அரக்கனுக்காய்.

–இளங்கோ

## திரும்ப முடியாக் காலம்

ஒளியைச் சுருட்டியபடி
விரையும் ரெயினின்
இழுபடும் பெட்டிகளில்
வாழ்வு ஓலமிடுகிறது
ஒரு ரூபாய் நாணயத்தை
தண்டவாளத்தில் வைத்துவிட்டு
புளியம்பூவை சுவைத்து நின்ற நாட்களும்
பிறகு ரெயினே வராத
நிராதரவான தண்டவாளங்களில்
சிலிப்பர் கட்டை பெயர்த்து
பங்கர்கள் சமைத்தபோதுகளில்
நம் கண்களின் முன்னே
ரெயினொரு வரலாற்றுப் பொருளாகக் கடந்துபோனது.
நின்று நிதானித்து
ஏறிப் பயணிக்கவோ விடுப்புப் பார்க்கவோ
எந்த இரெயினும் பிறகு வாய்த்ததுமில்லை

கடந்த காலங்களின் முன் மண்டியிடும்போது
வந்துசேரும் பதற்றத்திற்குள்
எப்போதும் ஒரு ரெயின் ஓடிக்கொண்டேயிருக்கிறது
வெயிலேறும் ஒழுங்கைகளில் செருப்பில்லாது
கள்ளிவேலிகளைக் கடந்த
சிறுவர்களை மீண்டும் உயிர்ப்பிக்காதவரை
எந்த ரெயினில் ஏறினாலும்
குழந்தமையைக் கொன்றுவிடும்
கொடுங்காலத்திற்குள் சென்றுவிடுமெனும் அச்சத்தில்
சிலிப்பர்கட்டைகளை மாற்றிமாற்றி
அடுக்கியபடியிருக்கின்றேன் தண்டவாளங்களில்லாது.

–இளங்கோ



## Vannimai

The Vannimai, or Vanni chieftaincies, were feudal land divisions ruled by chiefs south of the Jaffna peninsula in northern Sri Lanka. These chieftaincies arose in the 12th century, with the rise of the medieval Tamil kingdom's golden age and the collapse of the Rajarata kingdom. The chieftaincies developed in sparsely settled areas, and were ruled by Vanniars. An extension of the Jaffna kingdom's territory, the chiefs of the Vannimais were, for most of their existence, tribute-paying subordinates to Jaffna. At 1621, the Jaffna Kingdom was conquered by the Portuguese and the Vanni chiefs became tributaries of the Portuguese Ceylon. The Portuguese colony in Sri Lanka was later taken over by the Dutch. During the Dutch rule it came to Vannian resistances against the colonial rule, one of these was the rebellion of Pandara Vannian. Allied with the Kingdom of Kandy, Pandara Vannian fought with guerrilla tactics against the Dutch and British. At 1803, he was defeated by Lt. von Driberg and Vanni fell into hands of the British. Vanni had been reincorporated with Jaffna Peninsula to form the Malabar Coylot Vanni country which later became the Northern Province of Sri Lanka.

## Vanniar

Vanniar or Vannia was a title used by tribute-paying feudal chiefs in medieval Sri Lanka. It was also recorded as the name of a caste amongst Sri Lankan Tamils in the Vanni District of northern Sri Lanka during the early 1900s.

## Origin theories

The Vannimai ruling class arose from a multi-ethnic and multi-caste background. According to primary sources such as the Yalpana Vaipava Malai, some were descended from Vanniar caste immigrants from modern Tamil Nadu, whereas others were of Mukkuvar origins. There was also number of Vannia chiefs of Sinhalese ancestry.

Some Sri Lankan historians derive the title Vannimai from the Tamil word vanam, meaning "forest", with Vannia or Wannia meaning "person from the forest", and Vannimais being large tracts of forested land.

## Feudal chiefs

Tamil chronicles such as the 18th-century Yalpana Vaipava Malai and stone inscriptions like the Konesar Kalvettu recount that the Chola royal Kankan, a descendant of the legendary King Manu Needhi Cholan of Thiruvarur, Chola Nadu, restored the Koneswaram temple at Trincomalee and the Kantalai tank after finding them in ruins. Kankan visited the Munneswaram temple on the west coast of Sri Lanka, before settling in the east of the island. According to the chronicles, he extensively renovated and expanded the shrine; he was crowned with the epithet Kulakottan, meaning Builder of Tank and Temple. In addition to this reconstruction, Kulakottan paid attention to agriculture cultivation and economic development in the area, inviting the Vanniar chief Tanniuna Popalen and other families to a newly founded town in the Thampalakamam area to maintain the Kantalai tank and the temple. As a result of his policies, the Vanni region flourished. The Vanniar claim descent from this chief. Modern historians and anthropologists agree the historically factual connection of the Vanniars with the Konesar temple, and some cite epigraphical evidence to date Kulakottan's renovations to 432-440 AD. Others cite poetic and inscriptional evidence to date his renovations to as early as 1589 BC.

After the re-rise of the Tamil kingdoms and the demise of the Rajarata after the twelfth century AD,



many petty chiefs took power in the buffer lands between the northern Jaffna Kingdom and the southern kingdoms of Kotte and Kandy. These petty chefs paid tribute to the Jaffna Kingdom. Sometimes they were independent of any central control, or were subdued by the southern kingdoms for strategic advantages, before eventually being restored. Many kings and chiefs with titles such as Vannian or Vannia ruled in northern areas of modern Sri Lanka during the Jaffna era. Some of the Vanni chieftains were immigrants from southern India, and ruled over a populace known as rate-atto in Sinhalese. The Vanni chieftains ruled following local custom, supported by a coterie of local officials. Their rule had a noticeable influence on the language of the local populace.

## Northern chieftaincies

Among the medieval Vanni chieftaincies, those of Panankamam, Melpattu, Mulliyavalai, Karunavalpattu, Karrikattumulai, Tennamaravadi and Trincomalee in the north of the island were incorporated into the Jaffna Kingdom. Hence Vannimai's just south of the Jaffna peninsula and in the eastern Trincomalee district usually paid an annual tribute to the northern kingdom instead of taxes. The tribute was in cash, grains, honey, elephants, and ivory. The annual tribute system was enforced due to the greater distance from Jaffna. The arrival of the Portuguese to the island caused a brief loss of some of Jaffna's territory. Queirós, a historian of Portuguese origin, says of the Jaffna kingdom:

"This modest kingdom is not confined to the little district of Jaffnapatnam because to it are also added the neighboring lands and those of the Vanni which is said to be name of the lordship which they held before we obtained possession of them, separated from the proceeding by a salty river and connected only in the extremity or isthmus of Pachalapali within which the lands of Baligamo, Bedamarache and Pachalapali forming that peninsula and outside of it stretch the lands of Vanni. Crosswise, from the side of Mannar to that of Triquillemele, being separated also from the country of Mantota in the jurisdiction of Captain of Mannar by the river Paragali; which ends in the river of the Cross in the midst of the lands of Vanni and of others which stretch as far as Triquillemele which according to the map appears to be a large tract of country".

which indicated the kings of Jaffna just prior to capitulation to the Portuguese had jurisdiction over an area corresponding to the modern Northern Province of Sri Lanka and parts of the northern half of the eastern province and that the Portuguese claimed these based on their conquest. Following Portuguese defeat by the Dutch, the Mannar, Jaffna islands and the Vanni lands were reincorporated into the Tamil Coylot Wannees Country by the early 18th century.

## Western and Eastern chieftaincies

Vannimais in the Batticalao and Puttalam districts were under the control of chiefs of Mukkuvar origin. Puttalam was under Jaffna kingdom sovereignty in the 14th century, where it served as the second capital of the kingdom during the pearl fishing season. With the strengthening of Portuguese influence in the Kandyan and Kotte kingdoms, Vannimais in the eastern Batticaloa and Amparai districts came under the nominal control of the Kandyan Kingdom after the sixteenth century, although they had considerable autonomy under their chiefs. The Vanni Chieftaincy in the Puttalam districts came under the control of Kotte Kingdom. By the 18th century, the Batticaloa and Amparai (Panova) chieftaincies had been reincorporated into the Malabar Coylot Wanees Country.

~From Wikipedia

# அன்புநெறி – இலங்கை

# ஆண்டறிக்கை 2014

M.RAJANAYAGAM & CO
CHARTERED ACCOUNTANTS

அன்புநெறி மனிதாபிமான உதவி அமைப்பு
இலகு 102, உதயநகர், கிளிநொச்சி

31.12.2013ல் முடிவடைந்த 12 மாதங்களுக்கான
பெறுவனவுகள் கொடுப்பனவுகள் கணக்குகளுக்கான குறிப்புகள்

வளர்மதி நிறைவாழ்வகம் ஊடாக

| அன்பு நெறி மனிதாபிமான உதவி அமைப்பு - கனடா | குறிப்பு-01 |
|---|---|
| திகதி | ரூ |
| 20.01.2014 | 482,029.42 |
| 28.01.2014 | 478,427.72 |
| 10.11.2014 | 484,401.26 |
| 19.11.2014 | 489,480.40 |
| 10.12.2014 | 194,921.69 |
| | 2,129,260.49 |

| முன்பள்ளிக் கட்டிட உதவிகள் | | குறிப்பு-02 |
|---|---|---|
| இல | | ரூ |
| 1 | கீரன் | 54,000.00 |
| 2 | விநாயகபுரம் | 346,900.00 |
| 3 | சின்னதம்பனை | 637,759.00 |
| 4 | பாலக்குளம் | 428,547.00 |
| | | 1,467,206.00 |

M. RAJANAYAGAM & CO
CHARTERED ACCOUNTANTS

அன்புநெறி மனிதாபிமான உதவி அமைப்பு
இல 102, உதயநகர், கிளிநொச்சி

31.12.2014ல் முடிவடைந்த 12 மாதங்களுக்கான பெறுவனவுகள் கொடுப்பனவுகள் கணக்கு

| | குறிப்பு | ரூ |
|---|---|---|
| 01.01.2014ல் கையிலுள்ள காசு | | 733,272.72 |
| பெறுவனவுகள் | | |
| பெற்ற அன்பளிப்புக்கள் | | |
| வளர்மதி நிறைவாழ்வகம் ஊடாக | | |
| அன்பு நெறி மனிதாபிமான உதவி அமைப்பு - கனடா | 01 | 2,129,260.49 |
| வட்டி - சேமிப்புக்கணக்கு | | 14926.84 |
| | | 2,877,460.05 |
| கொடுப்பனவுகள் | | |
| முன்பள்ளிக் கட்டிட உதவிகள் - கனடா | 02 | 1,467,206.00 |
| முன்பள்ளிகளுக்கு விளையாட்டுப் பொருட்கள் அன்பளிப்பு - கனடா | | 95,534.00 |
| அன்பளிப்பு | | 192,141.00 |
| ஒளிவிழா | | 25,000.00 |
| வறிய மாணவர்களுக்கான செயற்திட்டம் | | 262,325.00 |
| மருத்துவச்செலவு | | 2,195.00 |
| பிரயாணச்செலவு | | 111,431.50 |
| சுயதொழில் முயற்சித்திட்டம் | | 246,300.00 |
| மாங்குளம் தொழில்பயிற்சி நிறுவனத்துக்கு வழங்கிய உதவி | | 20,000.00 |
| தொலைபேசி, மின்கட்டணம் | | 11,828.00 |
| காகிதாதிகள், அச்சடித்தல் | | 7,000.00 |
| | | 2,440,960.50 |
| 31.12.2014ல் கையிலுள்ள காசு | | 436,499.55 |

திரு சி. தயானேந்திரன்

01.01.2014 தொடக்கம் 31.12.2014 வரையிலான மேற்படி பெறுவனவுகள் கொடுப்பனவுகள் கணக்கானது கிளிநொச்சி அன்புநெறி மனிதாபிமான உதவி அமைப்பினால் பேணப்பட்ட புத்தகங்களிலிருந்தும், இவ் அமைப்பின் பொறுப்பாளர் திரு சி. தயானேந்திரன் அவர்களினால் எமக்கு தரப்பட்ட தகவல்கள், விளக்கங்களின் படியும் சோதனையிடப்பட்டு மேலால் சரியென உறுதிப்படுத்தப்பட்டுள்ளது

மேற்படி அமைப்பின் பெயரானது சட்டபூர்வமான முறையில் இன்னும் பதிவு செய்யப்படவில்லை

எம். இராஜநாயகம் அண்ட் கம்பனி
பட்டயக் கணக்காளர்கள்
திகதி : 2015ம் ஆண்டு ஜூப்ரவரி 19



## Anpuneri Humanitarian Relief Organization
### Balance Sheet
As of December 31, 2014

| | Dec 31, 14 |
|---|---|
| ASSETS | |
| Current Assets | |
| Chequing/Savings | |
| TD Bank - [redacted] | [illegible] |
| TD Bank - [redacted] | [illegible] |
| Total Chequing/Savings | [illegible] |
| Accounts Receivable | |
| Donations Receivable | [illegible] |
| Total Accounts Receivable | [illegible] |
| Total Current Assets | [illegible] |
| TOTAL ASSETS | 36,416.60 |
| LIABILITIES & EQUITY | |
| Liabilities | |
| Current Liabilities | |
| Accounts Payable | |
| Accounts Payable | [illegible] |
| Total Accounts Payable | [illegible] |
| Total Current Liabilities | [illegible] |
| Total Liabilities | [illegible] |
| Fund Balance | |
| Internally restricted Fund | [illegible] |
| Unrestricted Net Assets | [illegible] |
| Total Fund Balance | [illegible] |
| TOTAL LIABILITIES & FUND BALANCE | 36,416.60 |

## Anpuneri Humanitarian Relief Organization
### Profit & Loss
January through December 2014

| | [illegible] |
|---|---|
| Ordinary Income/Expense | |
| Income | |
| Direct Public Support | |
| BBQ Donat[illegible] | [illegible] |
| Dinner Ad | [illegible] |
| Dinner Donations and Tickets | [illegible] |
| Dollar A Day Contributions | [illegible] |
| Music Concert | [illegible] |
| Written Off | [illegible] |
| Total Direct Public Support | [illegible] |
| Total Collections/Contributions | [illegible] |
| Expense | |
| [illegible] | |
| [illegible] | [illegible] |
| Education Development | [illegible] |
| Kanchipuram Vinayakapuram Pre[illegible] | [illegible] |
| Sri Lanka Project Co[illegible] | [illegible] |
| Varod Claret Arunodavam Dormito | [illegible] |
| Total Projects | [illegible] |
| [illegible] | [illegible] |
| Bank Services Charge | [illegible] |
| BBQ 2014 | [illegible] |
| Dinner Book 2014 | [illegible] |
| Dinner Night | [illegible] |
| Music Concert | [illegible] |
| Office Expense | [illegible] |
| Total Expense | [illegible] |
| Excess of Revenues over Expenses | [illegible] |

 

# Request for Donations for Operating Early Education Centres

Anpuneri Humanitarian Relief Organization has been providing humanitarian assistance to the people of Northern and Eastern provinces of Sri Lanka who were severely affected by the civil war and natural disasters. We have been carefully allocating our funds to meet the most vital demands based on our first-hand knowledge and experience in rehabilitation activities gained over the past six years.

We strongly believe that education is the foundation for a future healthy and prosperous society and we have identified that early childhood education is one of the critical investments in that direction. Hence, Anpuneri has been providing funds for building, rehabilitating and operating early education centers for those who are economically disadvantaged. In addition to early education, these institutions provide students with free uniforms, nutritional supplements and opportunity to promote their sport activities. Further, we use most of these facilities and teachers for an after-school program to provide free tuition services to school children.

The following is the list of locations of early education centers that were built or rehabilitated by Anpuneri.

| No | Location | No of Students | No of Teachers |
|---|---|---|---|
| 1 | Sinnathampanai, Cheddikulam | 28 | 3 |
| 2 | Arasadikkulam, Cheddikulam | 22 | 2 |
| 3 | Kanthinagar, Cheddikulam | 35 | 3 |
| 4 | Kunchuparanthan, Kilinochchi | 10 | 1 |
| 5 | Uruthirapureesvaram, Kilinochchi | 30 | 3 |
| 6 | Kantharodai, Nedunkerni | 30 | 3 |
| 7 | Vinayagapuram, Paandiankulam | 35 | 3 |

In order to keep operating these education centres, we rely on the support of our generous donors. Currently we are looking for funds to support the above institutions. The estimated costs for addressing immediate needs and for operating them on an annual basis for these seven institutions are given below.

1. Early Education Center at Sinnathampanai, Cheddikulam

### Immediate Needs

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 3 Teachers | 3 x Rs 5,000 x 12 months | 180,000 |
| Nutritional supplements | 28 Children x Rs 500 x 12 months | 168,000 |
| Uniforms and shoes | 28 Children x $2,000 | 56,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance | Rs 2000 x 12 months | 24,000 |
| Sport- meets and prizes | | 50,000 |
| Total (SLR) | | 490,000 |
| Total (CAD) | | 4,580 |

### Annual Operating Expense

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Computer (1) | 40,000 |
| Educational equipment | 40,000 |
| Total (SLR) | 95,000 |
| Total (CAD) | 885 |

2. Early Education Center at Arasadikkulam, Cheddikulam

### Immediate Needs

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 2 Teachers | 2 x Rs 5,000 x 12 months | 120,000 |
| Nutritional supplements | 22 Children x Rs 500 x 12 months | 132,000 |
| Uniforms and shoes | 22 Children x $2,000 | 44,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance costs | Rs 2000 x 12 months | 24,000 |
| Sports meet and prizes | | 40,000 |
| Total (SLR) | | 372,000 |
| Total (CAD) | | 3,475 |

### Annual Operating Expense

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Computer (1) | 40,000 |
| Educational equipment | 30,000 |
| Water Facility | 75,000 |
| Total (SLR) | 160,000 |
| Total (CAD) | 1,495 |

3.Early Education Center at Kanthinagar, Cheddikulam

### Immediate Needs

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 3 Teachers | 3 x Rs 5,000 x 12 months | 180,000 |
| Nutritional supplements | 35 Children x Rs 500 x 12 months | 210,000 |
| Uniforms and shoes | 35 Children x $2,000 | 70,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance costs | Rs 2000 x 12 months | 24,000 |
| Sports meet and prizes | | 40,000 |
| Total (SLR) | | 536,000 |
| Total (CAD) | | 5,000 |

### Annual Operating Expense

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Computer (1) | 40,000 |
| Toilet repair | 15,000 |
| Furniture | 35,000 |
| Electrical connection | 40,000 |
| Educational equipment | 35,000 |
| Water Facility | 75,000 |
| Total (SLR) | 255,000 |
| Total (CAD) | 2,385 |

4. Early Education Center at Kunchuparanthan, Kilinochchi

### Immediate Needs

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 1 Teacher | 1 x Rs 5,000 x 12 months | 60,000 |
| Nutritional supplements | 10 Children x Rs 500 x 12 months | 60,000 |
| Uniforms and shoes | 10 Children x $2,000 | 20,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance costs | Rs 1000 x 12 months | 12,000 |
| Sports meet and prizes | | 30,000 |
| Total (SLR) | | 194,000 |
| Total (CAD) | | 1,815 |

### Annual Operating Expense

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Toilet (1) | 75,000 |
| Painting | 25,000 |
| Educational equipment | 10,000 |
| Name board | 5,000 |
| Total (SLR) | 130,000 |
| Total (CAD) | 1,215 |



5. Early Education Center at Uruthirapureesvaram, Kilinochchi

**Immediate Needs**

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 3 Teachers | 3 x Rs 5,000 x 12 months | 180,000 |
| Nutritional supplements | 30 Children x Rs 500 x 12 months | 180,000 |
| Uniforms and shoes | 30 Children x $2,000 | 60,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance | Rs 2000 x 12 months | 24,000 |
| Sport- meets and prizes | | 50,000 |
| Total (SLR) | | 506,000 |
| Total (CAD) | | 4,730 |

**Annual Operating Expense**

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Painting | 50,000 |
| Educational equipment | 30,000 |
| Fence | 25,000 |
| Name board changes | 5,000 |
| Total (SLR) | 125,000 |
| Total (CAD) | 1,170 |

6. Early Education Center at Kantharodai, Nedunkerni

**Immediate Needs**

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 3 Teachers | 3 x Rs 5,000 x 12 months | 180,000 |
| Nutritional supplements | 30 Children x Rs 500 x 12 months | 180,000 |
| Uniforms and shoes | 30 Children x $2,000 | 60,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance | Rs 2000 x 12 months | 24,000 |
| Sport- meets and prizes | | 50,000 |
| Total (SLR) | | 506,000 |
| Total (CAD) | | 4,730 |

**Annual Operating Expense**

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Computer (1) | 40,000 |
| Toilet repair | 15,000 |
| Furniture | 60,000 |
| Educational equipment | 35,000 |
| Total (SLR) | 165,000 |
| Total (CAD) | 1,540 |

7. Early Education Center at Vinayagapuram, Paandiankulam

**Immediate Needs**

| Description | Details | Amount (SLR) |
|---|---|---|
| Salary – 3 Teachers | 3 x Rs 5,000 x 12 months | 180,000 |
| Nutritional supplements | 35 Children x Rs 500 x 12 months | 210,000 |
| Uniforms and shoes | 35 Children x $2,000 | 70,000 |
| Electricity | Rs 1000 x 12 months | 12,000 |
| Repairs and miscellaneous maintenance costs | Rs 2000 x 12 months | 24,000 |
| Sports meet and prizes | | 40,000 |
| Total (SLR) | | 536,000 |
| Total (CAD) | | 5,000 |

**Annual Operating Expense**

| Description | Amount (SLR) |
|---|---|
| Storage cabinet (1) | 15,000 |
| Educational equipment | 35,000 |
| Furniture | 25,000 |
| Total (SLR) | 75,000 |
| Total (CAD) | 700 |

Knowing your continuous support in empowering our community in Sri Lanka, we believe that when we work together we can make a positive difference in the lives of hundreds of children. Your support and donations to keep operating these institutions would be greatly appreciated.

Thank you again for your continued support.

Anpuneri Humanitarian Relief Organization



# CHILDREN AID REHABILITATION AND EDUCATION PROGRAM

**Title of Project/Program**: C REP's Children Home - Mayilambaveli

**Name and Address of Organization**: Children Aid Rehabilitation and Education Program - C REP
Nonprofit registration number: 1665197

**Is this organization to be implementing the project?** (*if not, please specify who will*)? ESDO Helping Hands

**Organization Website** (*if any*): Chidrenrep.org

**Contact Name(s) of Key Person(s)**: Nirupa / Initha
**Phone Number(s)**: 647-982-3105
**Email(s)**: tnirupa@yahoo.com
**Fax**:
**Describe your organization** (*mission, major programs, year established, etc*):

Children Aid, Rehabilitation and Education Program (C REP) is a nonprofit charitable organization working towards rehabilitation and enhancement of children who have been affected by natural disaster, poverty and make them as individuals who can fend themselves. C REP was **founded in 2005 and it has been devoted to making a measurable difference in the lives of children.**

Previous Projects by C REP

- Provided food to children living in various children homes in Northern Sri Lanka. ( 2006-2008)
- Emergency relief for displaced civilians. ( 2008)
- Assisted UNICEF with a donation of $15,000 CAD to assist internally displaced children in Jaffna, Tricomalee and Vavauiniya. (2009)
- Provided emergency food rations to displaced Children in Pollmodai Camp. (2009)
- Funded education of university students. ( 2009- 2010)
- Assisted children with afterschool education / tutoring sessions in Batticaloa. (2010-2013)

**Background of Project**:

- Provide residence for 100 children

**Objectives:**

- Provide residence for 100 children
- Maintain health, wellbeing and success of the children
- Provide favorable living conditions that support the children's social / emotional growth.
- Consistent educational assistance
- Mental health and clinical assistance
- Provide an inclusive, supportive and caring living condition to enhance resilience in the children
- Provide employment opportunities via sustainability projects in the community

**Beneficiaries:**

Initial beneficiaries are the first batch of 25 children

ANPUNERI.ORG

 

# CHILDREN AID REHABILITATION AND EDUCATION PROGRAM

**Implementation Plan(Including fund transfer):**
Two story building approximately 8,540 square feet has been completed, in a five acre land. To bring the first t butch of 25 children C REP has fundraised recently via dinner, in which Anbuneri showed their support and we thank you for your kind gesture. We managed to fundraise around $15,000 from the event. C REP has in the process of buy all basic necessities and hires staff. Our plan is to have the children by end of January 2015

**Estimation**: It is estimated close to $23,000 to purchase necessary items for 25 children (Please see attach list, a quotation for the things required made close to 8 months ago)

**Title of Project/Program**: C REP's Children Home

**Description of Support Requested**: We request your support to purchase partial list of the items [25 bed, mattresses, study tables and cupboards for the incoming children]

**Project Monitoring and Completion Report Availability:** We will provide invoice of the purchased item along with photography evident for the delivery of the item

**Auditing Report Availability:** Not available now, planning to have the audit report for the year ended 2016

**Please provide the following information(For organization outside of Canada)**
**Your bank account or your fiscal sponsor's bank account**
**Account Name**:
**Account Number**:
**Sort Code**: ______________________________
**SWIFT**: ______________________________
**Bank Name**:
**Bank Address**:

**Other Information/Comments**:

**Statement of Verification**:
I hereby certify to the best of my knowledge that all of the information contained in this application is true and accurate

Nirupa 11/11/15
Signed Name & Date

Nirupa Thambalasingam President
Print Name Title/Position

*Please submit this form along with your proposal, detailed budget plan, annual report (if available), and any other supporting documents you may deem important.*

3



# காந்தி முன்பள்ளியின் அன்றைய நிலையும் இன்றைய நிலையும் ஓர் கண்ணோட்டம்.

இயற்கை எழில் கொஞ்சும் இலங்கையில் உள்ள வவுனியா. மாவட்டத்தின் செட்டிக்குளப் பிரதேசத்தில் காந்தி நகர் எனும் கிராமம் காணப்படுகின்றது. இங்கு காந்தி எனும் பெயர் கொண்ட பாலர் பாடசாலை அமைந்துள்ளது. 1998ம் ஆண்டு இக் கிராமம் அமைக்கப்பட்ட போதும் 2000ம் ஆண்டே முன்பள்ளி ஆரம்பமானது. இதற்கு என காணி ஒதுக்கப்பட்டிருந்த போதும் கட்டிடம் ஒன்று இல்லாத காரணத்தால் தற்காலிக கொட்டிலில் நடைபெற்று வந்தது. பின்னர் 2000 ம் ஆண்டு UNHCR நிறுவனத்தினால் முன்பள்ளி ஒன்று கட்டப்பட்டது. பின்னர் முன்பள்ளி அக் கட்டிடத்திலேயே இடம் பெற்று வந்தது. ஆரம்பத்தில் செல்வி எனும் ஆசிரியர் முன்பள்ளியை நடாத்தி வந்தார். மாணவர்கள் 15-20 க்குள்ளே காணப்பட்டனர். அவ்வாறு படிப்படியாக வளர்ந்து வந்தது. இல்ல மெய்வல்லுனர் விளையாட்டுக்கள். கலாச்சார நிகழ்வுகள், கண் காட்சிகள் என்பன இடம் பெற்றுவந்தது. பின்னர் இரண்டு ஆசிரியர்கள் மாறி மாறி கற்பித்து வந்தனர். Save the Children எனும் நிறுவனத்தால் மாலை நேர வகுப்பும் இடம் பெற்றது. பின்னர் 2012ம் ஆண்டுவரை இந்நிகழ்வுகள் நடைபெற்றன. பின்னர் 2013ம் ஆண்டு மலர்ந்தது. முன்பள்ளியும் மந்த நிலைக்கு தள்ளப்பட்டது. அகிலா அவரைத் தொடர்ந்து நடாத்திய ரெணிப்பிறேமினா அவர்கள் உடற் சுகயீனம் காரணமாக பாடசாலையை இடைநிறுத்தினார்.

முன்பள்ளி மூடும் நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் போதே அன்பு நெறி மனிதாபிமான அமைப்பை அணுகினோம். ஏனெனில் முன்பள்ளி இயங்காமல் காணப்பட்டதுதான் அதற்குக் காரணம். 2013-09-12 தொடக்கம் இன்று வரை கற்பித்துக்கொண்டிருக்கும் கோ.சியமளா ஆகிய நான் பொறுப்பேற்றுக் கொண்டேன். அன்பு நெறி மனிதாபிமான அமைப்பும் பல்வேறு பயனுள்ள திட்டங்களோடு இணைந்து கொண்டது. முதல் வேலையாக முன்பள்ளிக் கட்டிட நிறம் மங்கி பொலிவிழந்து காணப்பட்டதால் முதலில் நிறப் பூச்சினை அடித்து மெருகூட்டினோம். பின்னர் கதவுகள் மாற்றப்பட்டது. முன்பள்ளிக்கான விளையாட்டு முற்றம் காணப்பட்டாலும் அது பாவிக்க கூடிய நிலையில் காணப்படவில்லை. பின்னர் அதில் மாற்றக் கூடியவைகளை மாற்றி திருத்த வேலைகள் இடம் பெற்று பின் நிறப் பூச்சு அடிக்கப்பட்டது. இதற்கு முழு ஒத்துழைப்பையும் அன்பு நெறியே எமக்கு தந்தது. பின் பல்வேறு பெற்றோர் சந்திப்புக்கள் நடைபெற்றது. முன் பள்ளி வளாக சுற்று வேலியானது அந்தக்காலத்தில் போடப்பட்ட வேலிக் கம்பிகள் துருப்பிடித்து அறுந்த நிலையில் காணப்பட்டது. அதற்கான புதிய கம்பிகளை பெற்றுத் தந்தது அன்புநெறி. பெற்றோரைக் கொண்டு முள்வேலியை அடைத்தோம். கதிகால்கள் ஊண்டி பலப்படுத்தினோம். இருப்பினும் வெயில் காலத்தில் இறந்து விட்டது. பின் முன்பள்ளிக்கான கேட் போட்டுள்ளேன்.

அத்தோடு அன்பு நெறி மனிதாபிமான அமைப்பினால் அயல் முன்பள்ளியில் இருந்து உணவு சமைத்து எமது பெற்றோர் பிள்ளைகளை அழைத்து கொடுத்து மகிழ்ந்துள்ளோம். அது போல் நாமும் இரு தடவை உணவு சமைத்து ஏனைய முன்பள்ளிகளுக்கு கொடுத்தனுப்பி மன மகிழ்வு பெற்றுள்ளோம். இது போல் ஓர் அனுபவத்தை இதற்கு முன் கண்டதில்லை முதற் தடவையாக பெற்றுத் தந்தது அன்பு நெறியே. மற்றும் பொங்கல் விழாக்கொண்டாடினினோம். தை திருநாளுக்கு முதல் நாள் முன்பள்ளி மாணவர்களுக்கும் மாலை நேர வகுப்பு மாணவர்களுக்குமான பொங்கல் பொருட்கள் வழங்கி வீடுகளில் அனைவரும் பொங்கி மகிழக் கூடிய ஒழுங்கை ஏற்படுத்தி தந்து அன்புநெறி தான். இது மக்கள் மத்தியில் ஒற்றுமையையும் புரிந்துணர்வையும்

ஏற்படுத்தியது. அது போலவே இல்ல மெய்வல்லுனர் விளையாட்டுப் போட்டிகள் எமது கிராமத்தில் இடம்பெற்ற போதும் அயல் முன்பள்ளிகளோடு இணைந்து செய்யும் ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி தந்தது. போட்டி நிகழ்வாகவும் சுறுசுறுப்புடனும் ஒற்றுமை உணர்வுடனும் விளையாடி மகிழ்ந்தனர். மற்றும் சுய தொழில் வாய்ப்பையும் ஏற்படுத்தியது. கோழி வளர்ப்பு 10 பேருக்கான கோழிக்குஞ்சுகளை வழங்கி அவர்கள் வாழ்விலும் ஒரு வெளிச்சத்தை ஏற்படுத்தியது அன்புநெறியே ஆகும். மற்றும் மாலை நேர வகுப்புக்கள் முன்பு நாடாத்தினாலும் தொடர்ச்சியாக இடம் பெறவில்லை. இருப்பினும் அன்பு நெறியின் மாலை வகுப்பு இன்றும் நடாத்தப்படுகிறது. அதற்கென ஆசிரியர் ஒருவரை நியமித்து சிறிய ஊதியம் ஒன்றினை வழங்கி மாணவர்களை கற்றலில் ஊக்குவிக்கும் திறன் மிக்க ஒரு வழிகாட்டியாக விளங்குகின்றது. அத்துடன் முன்பள்ளிக்கான மின் இணைப்பைப் பெறும் நோக்கில் அதற்கான மின்சார வேலைகளையும் செய்து கொடுத்துள்ளது. இவ்வாறு அன்று இருந்த முன்பள்ளிக்கும் இன்று இருப்பதற்கும் நிறைய வித்தியாசம் காணப்படுகிறது. அன்புநெறி வந்து பல வேலைத்திட்டங்களை உருவாக்கி காந்தி முன்பள்ளியின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டது

# Table Sponsors

Akaila Ponnampalam & Family
Canadian Tamil Congress (CTC)
Canadian Tamil Medical Association (CTMA)
CayCey
Chandran DevanFamily & Friends
C-REP
Galaxy Real Esate Ltd
Gnany Ratnam Family & Friends
Siva Gowripalan Family & Friends
International Medical Health Organization (IMHO) - Two Tables
Mahajanans - 2 Tables
Mathushah & Friends
Mohendran Family & Friends
Nimalan Yogeswaran Family & Friends
Northern Cricket Club
Pratheepan Ponampalam Family & Friends
Thirukumar Family & Friends
Vanni Rehabilitation Organization for the Differently-Abled (VAROD)
University of Peradeniya Graduates - 3 Tables
Vanni Sangam

 

# மனம் வாழ்த்திட நினைக்கிறதே, வார்த்தை எங்கே ?......

பாதிக்கப்பட்ட மக்களுக்கென கடந்த காலங்களில் இலங்கையில் சேவையாற்றுவதற்காக தன்னை வன்னி மாவட்டத்தில் அறிமுகப்படுத்திக் கொண்ட அன்புநெறியானது தனது சேவையில் முன்பள்ளிச் சிறுவர்களின் கல்வி அபிவிருத்தியிலும், பாடசாலை மாணவர்களின் கல்வி முன்னேற்றத்திலும், திடீர் அனர்த்த நிவாரண செயற்பாட்டிலும், மாற்றுத்திறனாளிகளின் தேவைகளையும், கவனத்தில் கொண்டும் சேவையாற்றி வருகின்றது. அந்த வகையில் அன்புநெறியானது வன்னி மாவட்டத்திலே பல முன்பள்ளிகளை நடாத்திவருவதுடன் ஏனைய முன்பள்ளிகளின் தேவைகளுக்கேற்ப அவர்களுக்கான உதவிகளையும் வழங்கி வருகின்றது. இம்முன்பள்ளி மாணவர்களுக்கான மாலைநேர வகுப்புக்கள், விளையாட்டுப் போட்டிகள், பரீட்சை நடாத்துதல் போன்ற செயற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன.

அன்பு இல்லா இதயம் உண்டோ, அன்புநெறியின் சேவையில்லா இடமும் உண்டோ என்ற அளவிற்கு அன்புநெறியின் சேவை தற்போது வன்னி மண்ணிலே வலம் வருவதை எண்ணி அனைத்து உள்ளங்களும் அன்புநெறியின் சேவைதனை பாராட்டி வாழ்த்தி நிற்கின்றனர். அத்துடன் எதிர்வரும் காலங்களிலும் மக்களின் தேவைக்கேற்ற சேவைகளையும் அன்புநெறி வழங்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப் படுகின்றது.

## முன்பள்ளிகளின் சேவையில் அன்பு நெறியின் பங்களிப்பு

கட்டிட வசதி

ஆசிரியர்களுக்கான உதவு தொகை

மாணவர்களுக்கான சீருடை

விளையாட்டுப்போட்டிக்கான பரிசுபொருட்கள்

தளபாட வசதி

சத்துணவு வழங்கல்

முன்பள்ளிகளுக்கான பெயர்ப்பலகை

மின்சார வசதி

## திடீர் அனர்த்த செயற்பாடு

வெள்ள நிவாரணம் வழங்கல்

## பாடசாலை மாணவர்களின் கல்வி முன்னேற்றத்தில்

மாணவர்களுக்கான பகுதிநேர வகுப்பிற்கான உதவு தொகை வழங்கல்

தொழில்நுட்ப வளர்ச்சியில் உதவுதல்

## மாற்றுவலுவுள்ளோருக்கான பணியில்

கட்டிட வசதியினை ஏற்படுத்தல்.

அன்புடன்

செ.மலர்





ANPUNERI.ORG






# Dr Sivakumar Nagamuttu MD, CCFP

## General & Family Physician

www.drsiva.ca | info@drsiva.ca



**Walk In Clinic**



**Children**



**Family Practice**



**Urgent Care**



**ECG / Holter / ECHO**





**Travel Medicine**



**Lab Services**



**Cosmetic & Laser**

- BOTOX COSMETIC
- FILLER-JUVEDERM/PERLANE/RESTYLANE
- LASER HAIR/SKIN REJUVENATION
- MEDICAL MICRODERM ABRASION
- RADIOFREQ SKIN TIGHTENING
- LATISSE - EYE LASH GROWTH
- LED TEETH WHITENING

**1-1250 Castlemore Ave.**
**Markham ON. L6E 0H7**

# 905.554.9400

